கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

சுத்தசைவராகிய

# ஸ்ரீபரஞ்சோதிமாமுனிவர்

அருளிச்செய்த

# திருவிளையாடற்புராணம்

## மதுரைக்காண்டம்.

கயிலாயபரம்பரைத்
திருவாவடுதுறையாதீனமகாவித்துவான்
ஸ்ரீமீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள்
மாணாக்கராகிய
சென்னை கவர்ன்மெண்டு நார்மல்பாடசாலைத் தமிழ்ப்புலவராயிருந்த
சோடச அவதானம்
தி-க. சுப்பராயசெட்டியாரால்
தாம் இயற்றிய உரையோடு

சென்னை:
பா. சோமையரவர்களது
கலாநிதியச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.

1887
சர்வசித்து௵ வைகாசி.



விலை ரூபா-௪. அணா-௮.

சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்.

புரசை - அஷ்டாவதானம் வித்துவான்

## ஸ்ரீசபாபதிமுதலியாரவர்கள்

இயற்றிய

## நிலைமண்டில ஆசிரியப்பா.

புவிதிகழ்பணைமுடி யிவராத்தளிமத்—திறையெனநெடுங்க ணறிதுயிலமர்ந்த—பண்ணவனமுதலாப் பாறபடுமூவரும்—எண்ணியதமதொழி லண்ணுதன்றுணையின்—வழிநின்றுஞற்ற வாளாமேவும்—அழிவிலின்பத் தருட்கடற்பெருமான் எல்லையின்மான்மியம் பல்லவோதும்—சைவமுதலாந் தசபுராணங்களு—ளுய்வகைநிறுவு முயர்காந்தத்திற்—சனற்குமார சங்கிதைமுதலா—வுனற்குமாறாய் ஓங்கும்வகுப்பினுட்—சங்கரசங்கிதை யங்கணிறைதரூஉ—உலகமாம்புருடற் கலகிலாத்துவாத—சாந்தமாவயங்குசீ ரவாய்ந்தமாமதுரை—மான்மியமௌனத்தும் வடமொழிதன்னின்—மேன்முறைக்கண்ணே விரிதரவுள்ளன—தேன்சுவையதனினுந் தீஞ்சுவைபயக்கும்—தென்றமிழ்மொழியால் சிற்சிலவாகத்—தன்றினபயிலத் தொகுத்தனர்சில்லோர்—ஆங்கவையனைத்தும் பாங்குறத்திரட்டிச்—சுத்தசைவ வித்தகத்தொன்மைசால்—பரஞ்சோதிமுனிவா நிரம்புறவியற்றிய—வரஞ்சேர்திருவிளை யாடன்மாபுராணத்—திடம்பெறுநுண்பொருள் எளிதிலெவர்க்கும்—மடம்படவிளங்க வடநூற்கவிஞரால்—இந்நூன்முதனூல் இயல்பினுய்ந்து—தொன்னூலுரைநயந் தோற்றக்காட்டியும்—ஆங்காங்கமைந்த அரும்பொருள்சொற்சுவை—ஈங்குநனிவியப்ப இயைதரக்காட்டியும்—தன்னூவியனடை தோன்றயாங்கெவரும்—எந்நூல்விதியோ வெனவயராமல்—இலக்கணவிலக்கியம நலக்கக்காட்டியும்—பன்னலமகிடைப்பச் சொன்னலந்தழைப்ப—மிகுத்துரைபடாது வகுத்துரையெழுதினன்—அன்னவன்யாரெனில் அறையக்கேண்மின்—தன்னொருதுணையா மனினி குரவன்—அளவையுள்யாமறிந் தவைசிலகூறுதும்—அல்கலினிலைசெறிதொல்காப்பியமுதல்—சொல்காவியம்பல துகளறவுணர்ந்தோன்—எவ்வகைநூலா யினுங்கேட்பவர்தமக்—கவ்வவுளக்கிடை யளந்தெடுத்திசைப்போன்—பதிபசுபாசப் பான்மையைத்தெரிக்கும்—மதிகொள்சித்தாந்த வாய்மைகைவந்தோன்—தான்கற்றனவெலாம் தராதலத்துள்ளோர்—ஊன்புக்குருக்க வுரைப்பவனெனவும்—இதுபோற்பன்னய மெதனினுமிலையென்—றையந்தீர வையங்கிளக்கவும்—பராவுறுசைவ புராணம்பற்பல—மன்பதையனைத்து மின்புறநொடித்தோன்—திசையுலாமவனிசை பகர்வதற்கரிதென்ப தேனாக்ஷியபுகழ் மீனாக்ஷிசுந்தரப்—புலவர்கோமான்பாற் பலகலையுணர்ந்துளோன் அன்னவைக்கமைய மன்னியநடையோன்—சிவமேபரமெனத் தேர்ந்தவனடியர்தம் தவவேடமேபொரு டானெனக்கொண்டோன—பூதிசாதனம் போற்றியொழுகும் நீதியிற்பிறழா நிலைமையுடையோன்—கன்னல்கமுகங் காணெனையாரும்—பன்னினர் களிப்ப யாங்கணும்படப்பைசூழ்—திரிசிரபுரத்துள் வரிசைகூர்வாழ்க்கையன்—வீரராகவமால் விழுத்தவப்பேற்றுல்—நீர்தவழ்ப்பெரு நிலமிசைவந்துளோன்—தவறிலாச்சோடச வவதானத்திறல்—விறபணமாண்பு மிக்கசீர்க்குரிசில்—சுபபராயச்சுகுணநாவலனே.

சென்னைராஜதானிகல்லீஜில் தமிழ்ப்புலமைநடாத்திய
மஹாவித்துவான் கொட்டையூர்சசிவக்கொழுந்துதேசிகர்குமாரரும்
திருவாவடுதுறையாதீன மஹாவித்துவான்

## ஸ்ரீமீனாட்சிசுந்தரப்பிள்ளையவர்கள் மாணாக்கரும்

திருவனந்தபுரம்
மஹாராஜாகல்லீஜ தமிழ்த்தலைமைப்புலவரும் ஆகிய

# சாமிநாததேசிகரவர்களியற்றிய

நிலைமண்டில ஆசிரியப்பா.

திருவளர்மார்பன் சரோருகப்புனிதன—பொன்னுலகிறைவனே முன்னுளபு
லவரும்—பெயருமுருத்திரபிரளயமதனில—ஈறற்கஞ்சிகைகயிலையையெய்தி—மற
த்திலைசெவ்வானே ருக்கிப்புரநதெனக—காத்தருளெனறுப போற்றிவரம்பெறீஇ—
வேரடிகிளைதளிர் வேரிமலர்கனியாய்—படிசாலப் பகுப்பினவாக—ஆரணமாகம
மாருநூலெல்லாந்—திரிசூலைகடம்பா டவியிறசிவபிரான—சுநதரசுயம்பு சமட்டி
யிலிங்கமாயச்—சகளீகரித்தத தானிருநதடியார—பரவிநான்கின் பகுப்பதிநதய்
யச்—செய்தருள்லீலா வடமொழிச்செயயுளைச—சுத்தசைவ சித்தாந்தமரபில—வ
டகலைதெனகலை வழமைபுதெரிந்த—பாணுசோதிமுனிவனை பகாநததென்மொழித—தி
ருவிளையாட லெனுமொருநூலுக்—கணடமினைதது மளித்தயிராயிரமும்—அம்பி
கையொருபா லமைததவனேபத்—யெனவுணாநதவரொரு வொய்துயினெனலில—
சைவசாததிரஙகள தழுவநாற்கவிஞருமச—நசபிமெசசி யுச்சிவைச்சிடச—குன்றினி
லேற்றுங் கொழுஞ்சுடாவிளககின—ஈலவகையுளாயு நன்குறப்பொருநத—விளங்
கப்பொழிதது வெளிப்படுத்தினருஞ்—வானவர்மகிழ மாதவர்புகழ—மன்னவர்வ
ணங்கப் பொலனவரிணங்கச்—சிதம்பரவடைய மிதம்பெறததோன்றி—இலக்கிய
விலக்கண விருங்கடற்பருகி—கலங்கமதியரவு கவைபுகச்சூடியோன்—புரமபொடி
படப்பப பொருப்புவில்லெடுப்பான்—அண்டமலைதரா சமைத்தமதலையின—இசைய
ரதூயாநத திரிசிராமலையில்—காலூறறெழுநது காசினியதியச—சீாததித்தடிதனத்
திசைதிசைவீசிச்—சைவாகமநூற முறைபொழிந்த—மீனாட்சிசுந்தர வெழிலியிளை
யருள்—பெற்றுச சிறநதோர் தமயிறபெரியோன்—தராதலமேத்தாக தாவிலவளஞ்
சேர்—திரிசிரபுரமெனுஞ் செல்வப்பதியினன்—கீராக்கண்ணிக் கணனுதல்கழல
பணி—வீராகவமால் மெய்ததவத்துதித்தோன்—முழூர்க்கக்கொடைசவத தூயபே
றபுக—கொடிபடர்நதோங்கக் கொள்கொம்பாயினானை—இலக்கணவியாய மிலவ
யளநதறியும்—பதிபசுபாசப் பதிநூனவையற—விதிமுறையோதித தெளிநதவிதத
கன—அடுத்தவைபைம்பொ ஞகைகுஙகுருவில் — சததவேதயிற சார்நதோரதம்
மை—அறிவுகொளுத்துங் கலையருளறிஞன—அவையினையறி வோரறிவாக—அ
வதானம்புரிந தகமகிழவுறததம்—சுப்பராயப்பெயர்ச் சுகிர்தநாவலனே.

திருவாவடுதுறையாதீன மகாவித்துவான்
திரிசிரபுரம

## ஸ்ரீமீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள் மாணாக்கரும்,

தஞ்சை மிஷன்கல்லீஜ தமிழ்ப்புலவரும் ஆகிய

# ஐயாசாமிபிள்ளையவர்களியற்றிய

நேரிசையாசிரியப்பா.

பூவளர்சததளப் பொகுட்டுறைபுத்தேள்—தூவளரண்டத் தொகுதியாவும்—
மீற்றுவிற்றுகவிழுத்தகப்படைத்து—மன்னுயிர்த்தொகைக்கு மாசிலின்பம்—துன்னு
றநிறுத்திய துகளிலிவ்வைப்பில்—மாண்படவயங்கும் வடநூறன்னிற்—காண்படு

பதினெண் கவின்புராணத்துள்—சிறந்தோங்கிய சிவபுராணமீரைந்தி—லொன்றுங்
காந்தத்தொன்றுபிரிவாறினுளொன்—றாந்திருவாலவாய்வாய்ந்தமான்மியத்தை—ஆதி
யிலொருபரஞ்சோதிமாமுனிவரன்—செந்தமிழ்ப்பாவாற் சந்தமுறவகுத்தனன்—
அஃதிதுகாறுமாய்ந்தநற்புலவரால்—இஃதனையென்ன வியன்றமாணவாக்குச்—செ
வியறிவுறாதத்தெளிந்தேவந்தனா, அதனால்—சில்லோர்க்கன்றிப்பல்லோர்க்குமபய
ன்—இல்லாதிருந்தவியற்கைநோக்கி—எளிதினெவருமிரும்புலமையெய்தப்—பல
இல்சொற்பொருட்சுவைபாரித்தோங்கப்—பதிபசுபாசப்பகுப்பினிதுவிளங்க—நிறுவெ
னப்பேரிலக்கியக்கணெடிதோங்க—அன்னவையாவு மடைவுபெறக்காட்டிக்—கருத்து
மெச்சமும் கரிசறுமகலமும்—பொருத்துதன்னுரையுட் பொதிந்தோங்கவரைந்தன
ன்—அன்னவன்றன்மை யறையக்கேண்மின்—சந்தனப்பொதியச் செந்தமிழ்க்குரவ
ன்—அகத்தியப்புலவனறன் முகத்தியலாதி—உணர்ந்தமாணாக்கரு ளொருமுதலவ
னார்—தொல்காப்பியனெனச் சிலகாலத்துமுன்—அவ்வகத்தியனே யருளுருக்கொ
ண்டாங்—கிவ்வுலகத்து ளெழில்பெறத்தோன்றித—தெய்வவியற்பெருஞ்சைவபுரா
ணம—சொற்சுவைபழுத்தசுகவில்பிரபந்தம—பற்பலபகர்ந்தபாவலரேறும்—ஞானா
ட்சியோர்புகழ்நாவலர்கோமான்—மீனாட்சிசுந்தர மேலோன்றன்பால்—ஐந்திலக்க
ணமுண் டடியரிற்றலைவனாய—வந்தபுகழின் வண்மைசாற்கோன்—சரிசிலாவளஞ்
சேர் காவிரிசூழ—திரிசிரபுரமவாழ் செல்வவாழ்க்கையன — நன்னடைவாய்மை
நல்குறிப்பிறழா—இன்னியலமைந்தவிருங்குணமுடையோன்—சிவமேபொருளெ
னாந்தவம்புரியும—ராமமேவிய வீரராகவமால்—செய்தவப்பேற்றின் றிருவெனவந
தோன்—பெயயலோசெறிக்கும நீடுசொல்குலத்துள். சேகரகோத்திரச்சீர்மைமேவி
யோன—உலகருங்கலவியி லுணர்விற்சிறந்தோன், அப்பரவணிசடையரன்பா
லன்புசெய—சுப்பராயத் துகளில்புலவன்—அறறவுஞ்செய்த கோட்டமின்றிக்—
கிடங்கிலத்தெழிற் யியற்றுமுதவிக— குதவிசெயவாரிங் கொருவருமிலையால்—எம்ம
ஞோர்நம்மா லதனினுமிதனை—யேற்றமென்றெண்ணுவதன்றி—ஆற்றுவதொன்றும
வணிமிலிலையே.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அப்பரமதியணிசெஞ்சடைநதெம்மானறுபத்துநான்குதிருவிளையாட்டென்னு
ம், ஒப்பிலாக்காவியமாமொருதொன்னூலுக்குட்கிடையாமபொருட்சுவைமிக்கியாந
துதோன்ற, மெய்ப்பராவும்புகழ்சேர்கவிஞர்வேந்தன்மீனாட்சிசுந்தரநாவலன்மாணா
க்கன், சுப்பராயப்புலவனுரைவிரிந்ததுதொல்லுலகிலெல்லோர்க்குந்துலக்கினனே.

ஸ்ரீகைலாயபரமபரைத்

திருவாவடுதுறையாதீனத்துச்சிஷ்யரும்,

ஷை யாதீன மஹாவித்துவான்

திரிசிரபுரம் - ஸ்ரீமீனாட்சிசுந்தரம்பிள்ளை யவர்கள்

மாணாக்கரும்,

தில்லைவிடங்கன் வித்துவான்

மாரிமுத்துப்பிள்ளையவர்கள் பௌத்திரரும்

ஆகிய

சு-வேலுச்சாமிப்பிள்ளையவர்களியற்றிய

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மருவிளையாடலையகன்றமணிமார்பிலுறையமகிழ்மாலும்வெண்மை
யுருவிளையாடலைமகனுஞ்சதமகனுநிதமகலாதுவந்துபோற்றக்
கருவிளையாடலையுளற்றுமலம்போக்குமதுரேசர்கருணைமேய
திருவிளையாடலைவடமாமொழியினின்றுதென்மொழியாற்சேர்த்திமல்க. (க)

கண்ணியநால்வகைச்சொல்லுநயம்படவைத்தொர்ந்தலனுமேவித்
தண்ணியநரர்ந்தனோர்தந்தவரும்பத்திரசந்தயங்கிழூறப்
பண்ணியனுமொழிலிவைகள்பாக்கடொறுங்கனிசெய்யப்பரனைப்போற்றும்
புண்ணியனுஞ்சுத்தசைவப்பரஞ்சோதிமுனிவனவில்புராணநூற்கே. (உ

கருத்தமாயக்கட்வின்களைகாணுர்க்குலகோபகாரமாகத்
திருத்தமாய்ப்பதப்பொருளுநதெளிதரவாங்காங்கொளிரீவிசேடத்தோடு
பொருத்தமாயியற்குறிப்புமபொறித்துமலமாயையெனும்புன்மையாலாம்
வருத்தமாய்த்தின்பருளும்வாய்மையுறுசிததாந்தவளமுங்காட்டி. (ங

நச்சினுர்க்கினியமதாயீநவில்பரிமேலழகராய்நயக்குநாகக்
கச்சினுர்க்கினியவருட்கியையவிளம்பூரணமாய்க்காட்டுமுன்னு
வைச்சினுர்க்கினியதெனவரையாதுபத்திமையார்மனததிஞேர்ந்து
மெச்சினுர்க்கினியபலன்விரவவியன்மணககவுரைவியக்கச்செயதான். (ச)

அன்னவனுமொனிற்றன்னையடுத்தவரைத்தனமயமதாக்குமேரு
மன்னவனுதங்களிலெண்மடங்குவருபுகழுடையோனமழுமானேந்து
முன்னவனுர்பஃறலமான்மியமுரைததோனமலயமாமுனிவன்சொல்லேத
தென்னவனுமொனவளர்த்தமீனுட்சிசுநதரதேசிகன்பாலனபால். (ரு)

இகத்துறுதொல்காப்பியமாவிலக்கியமுமிலக்கணமுமின்பமல்கு
மகத்துறுசைவசித்தாந்தமெயநநூலுமபன்னூலுமையந்திரச்
சகத்துறுநல்லறிஞர்புகழ்தரவுணர்நதோன்தடவுடைகொடரணிமாதின்
முகத்துறுபொறதிலகமன்னுன்மூததறிஞர்குழாததிடையேமுயங்குநீரான். (சா)

திரிசிராமலேதருநஞ்சுதுதரிசித்துய்மினெனத்துலங்கக்காட்டும
பரிசிராமலேகளததமபரனருளுக்கிலக்காகும்பரிவின்மிக்கோன்
கரிசிராமலேயமர்நாற்கவிவல்லோன்வீரராகவவேண்மைந்தன
திரிசிராமலேயுடையான்றிவளீரொட்டவதானஞ்செய்யுந்திரன். (எ)

வாரணனுகிளமுலேதோய்வனஞெருணடர்தொகையாகவகுத்தவற்றுள்
வாரணனுந்தகங்கொடுமாமகவரிந்தோர்முன்னோரைமறவாநெஞ்சன
காரணனுண்மலர்க்குழலாள்காணியபொன்மணிமன்றிறகவினவாடுங்
காரணனும்பராபரன்ருள்பராவுறுசுப்பராயவியற்கவிசசிங்கேறே. (அ)

இந்நூலுரைகாரரும்

சென்னைக் கவரன்மெண்டு நார்மல்பாடசாலைத் தமிழ்ப்புலவரும் ஆகிய

சோடச அவதானம்

தி. க. சுப்பராயசெட்டியார் மாணுக்கர்

பிரம்பூர்

# கோவிந்தராஜகவிராயரியற்றிய

நேரிசையாசிரியப்பா.

உலகம்யாவும் இலகுறப்புகழும்—பொன்னெடுங்குன்றந் தன்னுறைவிடமாப்—பொருங்கயற்களித்த பெருந்திறல்வழுதியர்—வான்பிரதாபம் போன்மெனச்சேயொளி—நீட்டும்பங்கயக் கூட்டமுந்தமாது—விழுக்குடிமுதல்வனுய்ச் செழிக்

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# திருவிளையாடற்புராணம்

## மூலமும் உரையும்.

---

### சிறப்புப்பாயிரம்.

காப்பு.

சத்தியாய்ச்சிவமாகித்தனிப்பர
முத்தியானமுதலைத்துதிசெய்ச
சுத்தியாகியசொற்பொருணல்குவ
சித்தியானைதன்செய்யபொற்பாதமே.

(இதன்பொருள்)

சித்தியானைதன் செய்ய பொன்பாதம் - சித்திவிநாயகக்கடவுளுடைய செவ்வந்த பொன்போலும் அரியதிருவடிகள், சத்தியாய் சிவமாகி தனி பரமுத்தி ஆன முதலை துதிசெய - சத்தியாகியும் சிவமாகியும் ஒப்பில்லாத பரமுத்தியும் ஆகிய பரசிவத்தை வாழ்த்த, சுத்தியாகிய சொல்பொருள் நல்குவ - குற்றமற்ற சொல்லையும் பொருளையும் அருளாநிற்கும்.

"ஒருநாமமோருருவ மொன்றுமிலான்" என்றபடி விளங்கும் நிஷ்களசிவம் ஆன்மாக்களுடைய இச்சாஞானக்கிரியைகளை மறைக்கப்பட்டபேரந்தகாரமாகிய ஆணவமலத்தைத் தன்னிச்சைவழித் தனசத்தியால் நீக்குதலால் சத்தியாயெனவும், பராசத்தியுடம்பாகப் பரசிவநிற்றலைக் குறிப்பித்தற்கு ஆய் எனவும், அங்ஙனம் பராசத்தியே யுடம்பாகக்கொண்ட பரசிவம் சகளீகரித்திலதாயின் யாவுந்தொழிற்படாவாகலின் சிவமாய எனவும், பக்குவராயினார்க்கு "யோகியாயோகமுத்தி யுதவுவன்" என்றபடி ஞானாசாரியனாய உயிர்கள் மும்மலமும் அகன்று உலகாயதன்முதல் பாடாணவாதியீறாகக்கூறும் பத்துவகைமுத்தியும் பழிபடுமுத்தியென்று களைந்தடையத் திருவடி முத்தியை அருளுதலால் தனிப்பரமுத்தியான எனவும், மும்மூர்த்திகளானும் அறியவொண்ணாமுதலாய நிற்றலின முதலெனவும், சொல்லும் பொருளும் அம்மையப்பராய் நிற்றலானும் தற்போதத்தாலன்றி யருட்போதத்தால் துதிசெய்யவேண்டுமாதலானும் அங்ஙனம் அருளுவன பொற்பாதங்களாதலால் சுத்தியாகிய சொற்பொருணல்குவ எனவும், அடியார்கள்வேண்டியாங்கே அருளுவோர் சித்திவிநாயகராதலால் சித்திவிநாயகனெனவும், ஞானக்கிரியாரூபமாய்விளங்குதலால் செய்யபொற்பாதங்களெனவுங் கூறினார்.

தன்னிச்சைவழியென்றது சிவஞானசித்தியார், "சத்தன்வேண்டிற்றெல்லாமாஞ் சத்திதானே" என்றதனாலும், தன்சத்தியால் என்றது திருக்களிற்றுப்படியார். "நங்கையினாலனைத்துஞ் செய்தாற்போனடனைத்து, நங்கையினாற்செய்த

ளிக்குநாயகன்" என்றதனாலும், பராசத்தியுடம்பாகப் பரசிவம் நிற்குமென்றது சித்தியார். "பொன்மைநீலாதிவன்னம் பொருந்திடப்பளிங்கவற்றின், றன்மையாய்நிற்குமாபோல் சத்திதன்பேதமெல்லாம், நின்மலன்றானாய்த்தோன்றி நிலைமையொன்றாயேநிற்பன்" என்றதனாலும், பரசிவம் சகளீகரித்திலதாயின் யாவுந்தொழிற்படாவென்றது "படைப்பாதிதொழிலும் பத்தர்க்கருளும் பாவனையுநூலும், இடப்பாகமாதராரோடி யைந்துயிர்க்கின்பமென்றும், அடைப்பாறுமதுவுமுத்தி யளித்திடும் யோகும்பாசந், துடைப்பானுந்தொழிலுமேனி தொடக்கானேற்சொல்லொணாதே" என்றதனாலும், உயிர்கள் மும்மலமும் அகன்று உலகாயதன்முதல் பாடாணவாதியீறாகக்கூறும் பத்துவகைமுத்தியும் பழிபடுமுத்தியென்று களைந்தடையத் திருவடிமுத்தியை யருளுமென்றது சிவப்பிரகாசம். "அரிவையரின்புறுமுத்தி கந்தமைந்துமறுமுத்தி திரிகுணமுமடங்குமுத்தி, விரிவுவினைகெடுமுத்தி மலம்போமுத்தி விக்கிரகசித்தமுத்தி விவேகமுத்தி, பரவுமுயிர்கெடுமுத்தி சித்திமுத்திபாடாணமுத்தியிவை பழிசேர்முத்தி, திரிமலமுமகலவுயி ரருள்சேர்முத்தி திகழ்முத்தியதுமுத்தித்திறந்ததாமே" என்றதனாலும், மும்மூர்த்திகளாலும் அறியவொண்ணா முதல் என்றது-திருவாசகம். "தேவதேவன்மெய்யசேவகன் றென்பெருந்துறைநாயகன், மூவராலுமறியொணாமுதலாயவானந்தமூர்த்தியான்" என்றதனாலுமுணர்க.

ஓர் கருமஞ்செய்வோர் அது இடையூறின்றி முடிதற்பொருட்டு முன்னர் விநாயகக்கடவுளைத் துதிசெய்வது முறையாதலால் இந்நூலாசிரியரும் தாம் எடுத்த நூல் இடையூறின்றி இனிது முடிதற்பொருட்டு விநாயகக்கடவுளைத்துதிசெய்தார்.

விநாயகபுராணம் - திருவவதாரப்படலம்.

"முராரியாதிய தேவர்கள்முதலுறு முழுதுலகினிலுள்ளோர்
விராவியாதொரு காரியமாயினும் விளங்குறச்செயவெனறே
பராவியுன்னருச் சனைசெய்வோர் மனத்துறுபான்மைதந்தருளுனன்
பிராதுசெய்பவர் காரியமூறுசெய் திடுதியென்றிவைசொல்வான்."

என்றதனாலுமுணர்க. திருமால் முதலியோர் துன்பநீக்குதற்பொருட்டுக் கசமுகாசுரனைக்கொல்லக்கொண்டருளிய மாறுபட்ட திருவுருவங்களினுந் திருமுகஞ்சிறந்ததாதலின் சித்தியானையென்றார்.

திருமால்முதலியோர்க்குத் துன்பம்விளைந்தானென்றது
மேற்படி புராணம்-கசமுகனுற்பத்திபடலம்.

"வானநாட்டுறை யும்பரால் மன்னுமானிடரால்
தானவர்குலத்த தவர்களால் மற்றுளோர் தம்மால்
கானகத்துறு விலங்கினால் கருதயி ரிறந்தே
யீனமுற்றிடா வகையுமெற் கீந்தருளென்றான்."

என்றதனாலும், மாறுபட்ட திருவுருவங்களென்றது "மணிகொண்டகோடொருமருங்குண்மையாலாண்மை வடிவென்றுமஃதின்மையோர், மருங்குண்மையால்பெண்மை வடிவென்றுமீறுகிழ் மாறியதிருக்காட்சியால், அணிகொண்டவுயர்திணையதென்றுமஃறிணையென்று மார்க்குங்கிளத்தலரிதாம்" ஐங்கரச்சிந்துரத்தின், என்றதனாலும் உணர்க.

ஆய் - என்றது செய்து என்னும் வாய்பாட்டெச்சத்தின் விகாரம். ஆகி என்பது மது - பாதம் அஃறிணை இயற்பெயராதலால் பாற்பொதுமைநீங்க நல்குவ என அஃறிணைப்பன்மை முடிபுதந்தார். இச்செய்யுள் பாடாண்டிணையுள் கடவுள்

# சிறப்புப்பாயிரம்.

வாழ்த்து என்னும் துறை. தொல்காப்பியம். பொருளதிகாரம் புறத்திணையியல் "அமரர்கண்முடியும் அறுவகையானும் - புரைதீர்காமம் புல்லியபாங்கினும் ஒன்றன்பகுதியி னொன்றுமென்ப."

## வாழ்த்து.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மல்குகவேதவேள்விவழங்குகசுரந்துவானம்
பல்குகவளங்களெங்கும்பரவுகவறங்களின்பம்
நல்குகவுயிர்கட்கெல்லாநான்மறைச்சைவமோங்கிப்
புல்குகவுலகமெல்லாம்புரவலன்செங்கோல்வாழ்க.

(இ-ள்.) வேதவேள்வி மல்குக - வேதவிதிவழுவாமல் செய்யும் யாகங்கள் குறைவில்லாமல் நிரம்புக, வானம் சுரந்து வழங்குக - (அவற்றால்) மேகங்கருக்கொண்டு காலந்தப்பாமல் மழைபொழிக, எங்கும் வளங்கள் பல்குக - (நீர்நிறைமையால்) உலகமெங்கும் பலவளங்களும் பெருகுக, அறங்கள் பரவுக - (அவ்வளங்களால்) தருமங்கள் விருத்தியடைக, உயிர்கட்கு எல்லாம் இன்பம் நல்குக - (அத்தருமங்களால்) எல்லாவுயிர்களுக்கும் இன்பமுண்டாகுக, நான்மறைச் சைவமோங்கி உலகம எல்லாம் புல்குக - (இப்பேறுகளால்) நான்கு வேதங்களின் சம்பந்தத்தையுடைய சைவசமயமானது மற்றைச்சமயங்களுக்கும் அசசமயநூல்களுக்கும் மேற்பட்டு எல்லாவுலகங்களிலும் நிலைபெறுக, புரவலன் செங்கோல்வாழ்க - (இவை மாறுபடாமல்) நடத்தவல்ல அரசனது செங்கோல் நீடூழிவாழ்க.

ஆளுடையபிள்ளையார் புராணத்தில். "வேள்விநற்பயன் வீழ்புனலாவது" என்னும உண்மைத்திருவாக்கால வேள்வியைமுதற்கண்வைத்தும், இக்காரணங்களுள் ஒன்றினொன்று விளையினும் அரசன்செங்கோல் வழுவாதிருக்குமாயின் இவையும் வழுவாவென்பதுதோன்றப் புரவலன செங்கோல்வாழ்க என்பதை யிறுதிக்கண்வைத்துங்கூறினார். வேதம்-உடலும், சைவாகமம-உயிருமாதலால், நான்மறைச்சைவமென்றார். சிவப்பிரகாசம். "வேதாந்தத்தெளிவாஞ் சைவசித்தாந்தம்" என்பதனாலுணர்க. இம்மைப்பயன்களைவெறுத்துச் சிவமாநதன்மைப்பெருவாழ்வையடையும் அதிபக்குவராயினோர்க்கு அடையநின்றுளது அதுவாதலின், ஓங்கியுலகமெல்லாம் புல்குகவென்றார். சிவஞானசித்தியார். "வாழ்வெனுமையல்விட்டு வறுமையாஞ்சிறுமைதப்பித்,தாழ்வெனுந்தன்மையோடுஞ் சைவமாஞ்சமயஞ்சாரு,மூழ்பெறலரிது" என்னுந திருவிருத்தத்திறகாண்க. வேதமும் சைவமெனப் பொருள் கொள்ளின் - நான்மறை சைவமெனப்பாடங்கொள்க. ஆளுடையபிள்ளையார் புராணம். "வேதநெறிதழைத்தோங்க மிகுசைவத்துறைவிளங்க" என்றதனாலும், சித்தியார். "ஓதுசமயங்கள்பொருளுணருநூல்களொன்றோடொன்றொவ்வாம லுளபலவுமிவற்றுள், யாதுசமயம்பொருணூலியாதிங்கென்னி லிதுவாகுமிதுவல்லவெனும் பிணக்கதின்றி, நீதியினாலிவையெல்லா மோரிடத்தேகாண நிற்பதியாதொருசமயமதுசமயமபொருணூ, லாதலினாலிவையெல்லாமருமறையாகமத்தே யடங்கியிடுமவையிரண்டுமரனடிக்கீழடங்கும்" என்றதனாலுமுணர்க. ஷை தொல்காப்பியம். "அறுவகையானும்" என்றதனால் வேள்விமுடித்தற்க்காரணம் - பஞ்சகவ்வியமாதலால் ஆனிரையையும், முடிப்போர் அந்தணரும் முனிவோருமாதலால் முனிவோரையும் அந்தணரையும, வானமென்றமையால் மழையையும், புரவலன் என்றமையால் முடியுடைவேந்தனையும, செங்கோல் என்றமையால் நிலைபெறுதற்குத்தானமாகிய வுலகினையும், வாழ்த்தியதெனக்கொண்டு பாடாண்டிணையுள் அடக்குக "கட

வுளும் முனிவரும் பசுவும் பார்ப்பாரும் அரசரும் மறையும் நாடுமென்ப" என்னுஞ் சூத்திரத்தால். சைவம் என்றமையால் கடவுளையும் மறை யென்றதனால் நான்மறையையும் உடன் எண்ணினார்.

இவை யொன்றற்கொன்று காரணமாய்நிற்றலால் காரணமாலையணி. (௯)

## நூற் பயன்.

எண்சீரடியாசிரியவிருத்தம்.

திங்களணிதிருவாலவாயெம்மண்ண றிருவிளையாட்டிவையன்புசெய்துகேட்போர், சங்கநிதிபதுமநிதிச்செல்வமோங்கித் தகைமைதருமகப்பெறுவர்பகையைவெல்வர், மங்கலநன்மணம்பெறுவார்பிணிவந்தெய்தார் வாழ்நாளுநனிபெறுவர்வானுடெய்திப், புங்கவராயங்குள்ள போகமூழ்கிப் புண்ணியராய்ச்சிவனடிக்கீழ்நண்ணிவாழ்வார்.

(இ-ள்.) திங்கள்அணி திருவாலவாய் எம்மண்ணல் திருவிளையாட்டு - சந்திரனையணிந்த திருவாலவாயில் எழுந்தருளிய எமது இறைவனாகிய சோமசுந்தரக்கடவுள் செய்தருளிய திருவிளையாடல், இவை அன்புசெய்து கேட்போர் - இந்நூலுட்கூறிய திருவிளையாடல்களை அன்போடு வழிபட்டுக் கேட்பவர், சங்கநிதிபதுமநிதி செல்வமோங்கி தகைமைதரு மகப்பெறுவர் பகையைவெல்வர் - சங்கநிதி பதுமநிதியைப்போலும் செல்வத்தால் மிகுந்துயர்ந்து நல்லொழுக்கமுடைய புத்திரர்களைப் பெறுவார்கள் பகையை வெல்வார்கள், மங்கலம் நன்மணம்பெறுவர் பிணிவந்து எய்தார் வாழ்நாளும் நனிபெறுவர்-மங்களகரமாகிய நல்ல விவாகங்களைப் பெறுவர் நோய்வந்தடையப்பெறார் நீடித்த ஆயுளையும் மிகப்பெறுவார்கள் (இவ்வாறு இம்மைப்பயன்களை நுகர்ந்து) வானுடு எய்தி புங்கவராய அங்குள்ளபோகமூழ்கி புண்ணியராய் சிவன் அடிக்கீழ் நண்ணிவாழ்வார்-(அதன்மேல்)விண்ணுலகிற் சென்று தேவர்களாய் அங்குள்ள போகாதிகளை நுகர்ந்து சிவபுண்ணியங்களையும் உடையவர்களாய்ச் சிவபெருமானுடைய திருவடிநீழலில் அழியாது வாழாநிற்பர்.

ஆன்மாக்களது இச்சாஞானக்கிரியைகளுக்கீடா யிச்சாஞானக்கிரியைகளையுடையான்போன்று சுந்தரேசனடித்தருளிய திருவிளையாடலைக்கேட்டுழுறுவோர் இம்மை மறுமைப்பயன்களைக்குறைவின்றி நுகர்வாரென்பார், சங்கநிதி பதுமநிதிச் செல்வமோங்கி - புங்கவராயங்குள்ளபோகமூழ்கி - எனவும், சிவபுண்ணிய மிகுதியால் சிவனது திருவடியை அடைவாரெனபார - சிவனடிக்கீழ் நண்ணிவாழ்வார்- எனவுங்கூறினார்.

தேவாரம். "இம்மைவானவர் செல்வம்விளைத்திடும்" என்பதனாலும், சிவஞானசித்தியார். "புண்ணியமேனோக்கும் பாவங்கீழ்நூக்கும் புண்ணியனைப்பூசித்த புண்ணியத்தினாலே, நண்ணியஞானத்தினு லிரண்டினையுமறுத்து ஞாலமொடுகீழ் மேலு நண்ணாகி, விண்ணுமிகலோகத்தே முத்திபெறுமிவன்றானெங்கெழிலென் ஞாயிறெமக்கென்று குறைவின்றிக், கணுத்தறனனிறைவதனிற்கலந்துகாயங் கழிந்தக்காலெங்குமாய்க் கருதான்போனிற்பன்" என்பதனாலுமுணர்க.

திருவிளையாட்டு-இப்பெயர் தன்னையுணர்த்துதற்குத் தானமாகிய நூல்மேனிற்றலால்-தானியாகுபெயர். புண்ணியரென்பதன் இறுதியில் உயர்வுசிறப்பும்மை தொகுத்தல், சங்கநிதி பதுமநிதி குபேரனுடைய செல்வங்கள், அந்நிதிகள் சங்கவடிவாகவும் தாமரைவடிவாகவும் உள்ளன. செல்வம் மிக்கோங்கி உயர்திணையோடு

தொடர்ந்த அஃறிணை உயர்திணை முடிபேற்றுப பெறுவர் என்னும் வினைமுற்றின் முதனிலையோடு முடிந்தது. வந்து செயவெனெச்சத்திரிபு.

திங்களணி யென்னும் விசேஷணம், கேட்போர் குறையின்றுநீங்கி இம்மையிற் பெருஞ்செல்வராய மறுமையினும அழியாவின்பததை நுகர்வாரென்னுங் கருததை யுட்கொண்டிருத்தலால் கருத்துடையடையணி.

சநதிரன் தக்கன் சாபததால் சோடசகலைகளுள் பதினைந்து கலையிழந்து ஒருகலையையும இழப்பதன்முன் சரணடையச் சிவபிரானுர் கருணைகூர்ந்து அத்தக்கன்சாபநதொடராமல அவ்வொருகலையைத் தமது திருமுடியிலணிந்து கலைவளருமபடி அனுககிரகஞ்செயதாரெனபது நூல்வரலாறு.

கந்தபுராணம் - தக்ஷகாண்டம், சந்திரசாயப்படலம் விருத்தம்.

"தீர்ந்தில வன்றியே திங்கடன்னிடை
ஆர்ந்திடுகலையினை யங்கையிற்கொளா
வார்ந்திடுசடைமிசை வயங்கச்சேர்த்தினன்
சார்ந்திலதிவ்வழித் தக்கன்சாபமே" (௨)

---

# கடவுள் வணக்கம்.

## சிவபெருமான்.

அறுசீரடியாசிரியவிருததம்.

வென்றுளேபுலன்களைந்தார்மெய்யுணருள்ளந்தோறுஞ்
சென்றுளேயமுதமூற்றுந்திருவருள்போற்றியேற்றுக்
குனறுளேயிருநதுகாடசிகொடுததருள்கோலம்போற்றி
மன்றுளேமாறியாடுமறைசசிலம்படிகள்போற்றி.

(இ-ள்.) உள்ளே புலன் வென்று களைந்தார் மெய் உணர் உள்ளந்தோறும் சென்று உளளே அமுதம் ஊறறுமம திரு அருள்போறறி-உட்புலன்கள் ஐந்தும்வென்று களைநதவாகளுடைய உண்மையையுணாந்த இதையங்கள் தோறுஞ் செனறு அவர்கள் அறிவுள்ளே பேரின்பமாகிய அமிர்தத்தைப் பொழிகின்ற திருவருளுக்குவந்தனம, குன்று ஏறு உள்ளே இருந்து காட்சி கொடுத்தருள் கோலமபோறறி - வெளளிமலைபோலும இடபததின்கண ஆரோகணித்துத் தரிசனங்கொடுத்தருளும திருவருட்கோலததுககு வந்தனம், மன்று உள்ளே மாறி ஆடும் மறைச்சிலம்பு அடிகள் போறறி-வெள்ளியம்பலத்தின்கண கால்மாறியாடியருளும் வேதங்களாகிய சிலமபுகளணிந்த திருவடிகளுக்கு வந்தனம

ஐமபுலன்வழியேசென்று அழிதன்மாலையவாம் விடயங்களை மெய்யென்று கருதாது அவறறைப் பொய்யென்று களைந்து அவையிற்றோடுகூட்டி யறிவிப்பானுகிய சிவனே மெயயென்றுணருமம விஞ்ஞானகலர்க்கு உள்ளந்தோறும் அறிவுக்கறிவாய நிறைநது நின்று ஒருமலமுமகற்றிச் சிவானந்தத்தேனை யூற்றுதல் இறைவனது செயலாதலால், உள்ளே யமுதமூற்றுந திருவருள்போறறி எனவும், பிரளயாகலருக்கு மானமழு சதுர்ப்புச காளகணடதிரிநேததிரங்களோடு இடபாரூடனுய்த் தன்னியறகைவடிவே குருவடிவாகக்காட்டி இருமலமுமகறறிக் காட்சிதந்தருளுதல் அவ

னது கோலமாதலால் ஏற்றுக்குன்றுளேயிருந்து காட்சிகொடுத்தருள் கோலம்போற்றி எனவும், அவிச்சைவயதராகிய சகலராயுள்ள ஆன்மகோடிகளுக்கு ஸ்ரீபஞ்சாக்கர திருநடனத்தால் திரிபதார்த்தஞானத்தை விளக்கி மும்மலமுநீர்த்துத் திருவடிசூட்டியாளுதல் அவனது முறையாதலால் ஆடுமறைசசிலம்படிகளபோற்றி யெனவுங்கூறினர்.

மானைக்காட்டி மானைப்பிடிப்பதுபோல் மானிடச்சட்டைசாத்திப் படர்க்கையாய்முதல்வனின்று சகலருக்கு மும்மலமு மொழித்தல்செய்வானென்று கூறியிருக்கவும் நடராசப்பெருமானை அன்னோர்கரு இங்ஙனம் குருவாகக்கூறியது எனனையெனின், "அடியார்க்கெளியன் சிற்றமபலவன்" எனக்கூறியிருப்பதினாலும், நிராதாரத்தில் முறையே உள்ளத்திலுணாததியும், புறத்தில் காட்சிதநதருளி மறைவதும் போலன்றிச் சகலராயுள்ள ஆனமகோடிகளெல்லாந் தரிசனமாத்திரததால் ஆணவாதிநீக்கமும் அருட்பதிவும ஆனநதப்பேறும் எளிதிற்கூட அனவரததாண்டவஞ் செய்து நிற்றலினென்க.

ஊற்றுநதிருவருள் எனவும் கொடுத்தருள்கோலம் எனவும் ஆடும் அடிகள் எனவும் உடையவரது தொழிலை உடைமைகளமேலேற்றிக்கூறினர். (ந)

## சிவசத்தி.

*வேறு.*

சுரும்புமுரல்கடிமலர்ப்பூங்குழலபோற்றியுத்தரியத்தொடிததோள்போறறி
கரும்புருவச்சிலைபோறறிகவுணியர்க்குப்பால்சுரந்தகலசமபோறறி
யிரும்புமனங்குழைத்தென்னையெடுத்தாண்டவஙகயற்கணெம்பிராட்டி
யரும்புமிளநகைபோற்றியாரணநூபுரஞ்சிலம்புமடிகள்போற்றி

(இ-ள்.) இருமபுமனம் குழைத்து எனனை எடுத்து ஆண்ட அங்கயற்கண் எம்பிராட்டி - இரும்பையொதத வலிய மனத்தை இளகச்செய்து (ஆணவததில் அழுந்திக்கிடந்த) என்னையெடுத்து அடிமைகொண்டருளிய மீனாக்ஷியம்மையாராகிய எமது பிராட்டியாருடைய, சுரும்புமுரல் கடிமலர் பூங்குழல்போறறி - வண்டுகள் தேனுண்டிசைபாடும வாசனையையுடைய மலரையணிநத பொலிவினையுடைய கூந்தலுக்கு வந்தனம், உததரியம தொடிதோள்போறறி - உத்தரியததையும் தொடியையும் அணிந்த திருத்தோள்களுக்கு வந்தனம், சிலை கருமபுருவம போற்றி - வில்போலும் வளைந்த கரிய திருப்புருவஙகளுக்கு வநதனம், கவுணியர்க்கு பால்சுரநத கலசம்போறறி-கவுணிய கோததிரததில் தோன்றிய ஆளுடைய பிள்ளையாருக்குத திருஞானப் பால்சுரந்தருளிய பொறகலசம்போனற திருத்தனங்களுக்கு வந்தனம், அரும்பும் இளநகைபோற்றி - தோன்றுந் திருப்புன்னகைகளுக்கு வந்தனம, ஆரண நூபுரம் சிலம்பும அடிகள்போறறி - வேதமாகிய சிலமபுகள ஒலிக்கின்ற திருவடிகளுக்கு வந்தனம்.

கேசாதிமுதல் திருவடிகாறும வணக்கம் கூறினர் ஆன்மாக்கள் உய்யும்பொருட்டுப் புறச்சமயங்களொழியவும, சைவசமயம் ஓங்கவும் திருஞானப்பாலூட்டினமையாலும், ஆன்மாக்களின் பிறவி வெப்பொழியப் பேரின்ப நிழல் தருதலாலும், ஏனைய வுறுப்புகளுக்கு அடைகொடுத்ததுபோலத் திருத்தனத்துக்கும திருவடிக்கும அடைகொடாதும், செம்பிற்களிதம்போல ஆணவத்தோடு அத்துவிதமாயிருநத ஆன்மாக்களை ஞானக்கிரியைகளானெடுத்து அஞ்ஞான்றுதொட்டு இச்சைவழி மாயையால் தனுகரண புவனபோகங்களைக்கொடுத்து அவரவர் கன்மங்களுக்கிடாய்த்

திரோதான சத்தியாய்நின்று மாயேயமாகிய காணசையோக விடயங்களை இன்புருவாய் நுகர்வித்துத் தொலைத்து இருவினைகளொத்தவழி மலபரிபாகத்தில் சத்தினிபாதம் விளங்கக் கருணைவடிவாய் நின்றருளுதலின, இருமபுமனங்குழைத்தென்னை யெடுத்தாண்ட எனவுங்கூறினார். சிவப்பிரகாசம், "இனையபலபிறவிகளி னிறந்துபிறந்தருளா னிருவினைகள்புரிநதருந்து மிதுசகலமகலா, முனமருவுமிருபயனு மொருகாலத்தருந்த முநதறுகருநதுபய னந்தமுறவந்த, வினையுமெதிர்வினையுமுடிவினையுதவுபயனு நேராகநேராதல் மேவுங்கான்முற, சினமருவுதிரோதாயி கருணையாகித் திருநதியசத்தினிபாதந் திகழுமன்றே" என்பதனாலுணர்க.

அங்கயற்கணெம்பிராட்டி என்னுந் தொடரை முன்னும் பின்னுங் கூட்டப்படுதலால் இடைநிலைத்தீவகவணி. (ரு)

## ப ர சி வ ம்.

### க லி நி லை த் து றை.

பூவண்ணம்பூவின்மணம் போலமெய்ப்போதவின்ப
மாவண்ணமெயகொண்ட வன்றன்வலியாணைதாங்கி
மூவண்ணறன்சந்நிதி முத்தொழில்செயயவாளா
மேவண்ணலன்னான் விளையாட்டின்வினையைவெல்வாம.

(இ-ள்.) பூவண்ணம் பூவினமணமபோல - பூவினிறமும் பூவின்வாசமும் அபேதமாய நிறறல்போல, மெய் போதம இன்பம மெய ஆவண்ணங்கொண்டவன் தன்வலியாணைதாஙகி - உண்மையறிவானந்தங்களே திருமேனியாகும்வண்ணங் கொண்டருளிய சிவபிரானுடைய சததியின் ஏவலை மேறகொண்டு, மூன்று அண்ணல் தன் சநநிதி முத்தொழில்செய்ய - பிரமன் திருமால் உருததிரராகிய திரிமூர்ததிகளும் தன் சந்நிதியில் படைப்புக் காப்புச் சங்காரம் என்னு மூன்றுதொழில்களையுஞ்செய்யாநிற்க, வாளாமேவு அண்ணல் அன்னான் விளையாட்டின் வினையை வெல்வாம் - அசைவற்றிருக்குங் கடவுள அககடவுளுடைய திருவிளையாடல்களால் விடாது தொடருங் கருமமலத்தைக் களைவாம.

பூவினிறமும் பூவின்மணமும் பூவையன்றி வேறின்மைபோல உண்மையறிவானந்தமே சிவபெருமான் திருமேனியன்றி வேறில்லை என்பார் - மெய்ப்போதவின்பமாவண்ண மெய்கொண்டவன் எனவும, "ஒரு நகரியைக்காப்பான் பாடிகாவலிட்டாங்கு" மும்மூர்த்திகளும் ஆன்மாககளுக்கு இருவினைகடோய்ப் பிறப்பு இருப்பு இறப்புகளைப் புரியவென்பார் - வலியாணைதாங்கி மூவண்ணல் தன் சந்நிதி முத்தொழில்செய்ய எனவும், சிற்சடபேதமாயுள்ள சகல தத்துவங்களையும் அருவம் உருவம் அருவுருவமாகிய தத்துவ கர்ததாக்களையுங் கடந்துநின்ற சுத்த சிவம் தன் சந்நிதிமாத்திரத்தான் இயக்கித் தானியங்காதுநிற்குந் தன்மையன் என்பார் வாளா மேவண்ணல் எனவும், ஆன்மகோடிகளுங்கா மவற்றைத் தனதேவலராற் பாரம்பரியங்களாய்ப் புரிதலபோலாது தன்னடியாாகள் வேண்டியவற்றை வேண்டியவாறு அளித்து மலங்களைத் துடைத்துத் திருவடியிற் சேர்த்துக்கோடலே தனது ஆதிகுணமாந் திருவிளையாடல் என்பார் அன்னான் விளையாட்டு எனவும், அங்ஙனமுள்ள திருவிளையாடலை ஓதல் ஓதுவித்தல்முதலிய வைவகையானுங் கருமமலத்தைநீக்கிக்கோடல் துணிவென்பார் வினையைவெல்வாம எனவுங் கூறினார்.

சிவஞானசித்தியார். "சாற்றிய கதிரோனிற்கத் தாமரை பலருங்காந்தங் - காற்றிடுங்கனலைச் சேருங் காந்திடுங்காசினிக்கே" என்பதனானும் "சிவனுருவருவுமல்லன் சித்தினோடசித்துமல்லன், பவமுதற்றொழில்களொன்றும் பண்ணிடுவானுமல்லன், தவமுதல் யோகபோகந் தரிப்பவனல்லன்றானே, இவை பெறவியைந்துமொன்று மியைந்திடா வியல்பினானே" என்பதனானும். தேவாரம். "வேண்டுவார் வேண்டியாங்கே, ஈண்டினியார் பெரிதுஞ்செயவா ரதிகைவீரட்டனாரே" என்பதனானு முணர்க.

ஏனா என்றும் இடைச்சொல்-சும்மாவென்னும் பொருண்மேனின்றது, வருமொழி முதலுயிர்வந்தமையால் ஈறுகெட்டுநின்ற மூன்று என்றும் எண் முதல் குறுகாமலும், வருமொழிமுதல் மெய்வந்தமையால் முதல் குறுகி முத்தொழில் எனவும் நின்றன. படிப்போராயுங் கேட்போராயுந் தன்னொருப்படுத்துக் கூறுதலால் வெல்வாம உளப்பாட்டுத் தன்மைப் பன்மை வினைமுற்று. (ரு)

௬.

அண்டங்களெல்லா மணுவாக வணுக்களெல்லா

மண்டங்களாகப் பெரிதாய சிறிதாயினானு

மண்டங்களுள்ளும் புறமுங்கரியாயினானு

மண்டங்களீன்ற துணையென்ப ரறிந்த நல்லோர்

(இ-ள்) எல்லாம் அண்டங்கள் அணுவாக பெரிதாயிருக்கும் - தன்னை நோக்குமிடத்து எல்லா அண்டங்களும் அணுவளவாய சிறப்ப பெரிதானவனும், அணுக்கள் எல்லாம் அண்டங்களாக சிறிதாயிருக்கும் - எல்லா அணுக்களும் அண்டங்களாய சிறக்கச் சிறிதானவனும், அண்டங்கள் உள்ளும் புறமும் கரியாயிருக்கும் - அண்டங்களின் உள்ளும் புறமும் உள்ள பொருள்களைக் கண்ட சாக்ஷியாய இறைவனும், அறிந்த நல்லோர் அண்டங்கள் ஈன்ற துணை என்பர் - வேதாகமங்களையுணர்ந்த பெரியோர் அவ்வண்டங்களைப்பெற்ற உமைபாகருடைய கணவன் என்று கூறுவர்.

சுத்தம் அசுத்தம் மிச்சிரமாகிய மாயாகாரியமாயுள்ள அண்டத்தொகுதிகளெல்லாம் அணுவாம் மகாசங்காரத்தில் முறையே காரணமாயையிலொடுங்க அம்மாயை சிறசத்தியிலொடுங்கச் சிறசத்தி தனக்காதாரமாகிய சிவத்திலொடுங்கச் சிவமொன்றேயாய சேடித்தது தானே தானாய நிற்றுமவதரத்துப் பெரிதாயநிற்றலின் பெரிதாயினானும் எனவும், யாது யாண்டொடுங்கும் அஃது அதனின் உற்பத்தியாம் மண்ணிற்குடம்போலுமன்னது ஆவிருபாவத்தால் மீளத்தோன்றுங்கால் சத்தி சங்கற்பித்தவழிக் காரணமாயையின் காரியப்பாட்டால் அணுக்களாயொடுங்கிய அண்டங்களெல்லாம் முன்போல விரிந்து தோன்றிய அவசரத்து-"தோன்றுந் துணையாயிருந்தான்" என்பதுபோலச் சிறிதாய் நிற்றலின் சிறிதாயினானும் எனவும், முற்றுமுணர்ந்தறன்மையால் அவையிற்றின் தோற்றக்கேடுகளுக்கெல்லாஞ் சான்றாய நிற்றலின் அண்டங்கள் உள்ளும் புறம்புங் கரியாயினானும் எனவும், காரியகாரணரூபமான தோற்றக்கேடுகளை அவ்வவ்வியல்பிற பிறழாமல் பயப்பிக்குஞ் சதுரப்பாடுடைய துணைவியாகிய சிற்சத்திக்கு ஆதாரமாகிய துணைவனாய் நிற்றலின் அண்டங்களீன்ற துணை எனவும், பதிபசுபாசங்களை அறுதியிட்டுரைக்கும் பதிநூலாகிய வேதாகமங்களின் றுணிபாம், அறத்தின் வழியறிந்த அருளுடையாரக்கன்றி அவற்றிற்குமாறாய் முப்பொருட்செய்தியை முரணிக்கூறும் பசுநூல்களின் றுணிபாம், மறத்தின்வழிப்போ மருளுடையார்க்கு உணரக்கூடாதாதலின் அறிந்த நல்லோர் என்பர் எனவுங் கூறினார்.

திருவிசைப்பா. "அண்டமோரணுவாம் பெருமைகொண்டணுவோ ரண்டமாஞ் சிறுமைகொண்டு" என்பதனாலும்.

சிவஞானசித்தியார். "தவந்தருஞானத்தோர்க்கித் தன்மைதான் றெரியுமன்றே" என்பதனாலுமறிக.

பெரிது சிறிது என்பவற்றிற்கு அளவையைத் தோன்றா வினைமுதலாகக் கொள்க. உண்டங்களென்பவற்றின் முதலில அகரச்சுட்டுத்தொகுத்தல். உள்புறம்பு உயிர்களைமேனிற்றலால் இடவாகுபெயர்கள். துணை பண்பாகுபெயராய்ப் பண்பிமேல் நின்றது. (௬)

## சொக்கலிங்கமூர்த்தி.

கலிவிருத்தம்.

பூவி னாயகன் பூமக ணாயகன்
காவி னாயக னாதிக்கடவுளர்க்
காவி நாயக னங்கயற்கண்ணிமா
தேவி நாயகன் சேவடியேத்துவாம்.

(இ-ள்.) பூவின் நாயகன் பூமகள் நாயகன் காவின் நாயகன் ஆதி கடவுளர்க்கு ஆவி நாயகன் - தாமரைமலரில்வசிக்கும் தலைவனாகிய பிரமன் இலக்குமிதேவியின் தலைவனாகிய திருமால் கற்பகச்சோலையின் தலைவனாகிய இந்திரன்முதலிய மற்றைக் கடவுளாகளுக்கும் உயிர்போலவுமுள்ள தலைவனும், அங்கயற்கண்ணிமா தேவி நாயகன் - மீனாக்ஷியம்மையாகிய மாதேவியின் தலைவனுமாயுள்ள சிவபெருமானுடைய, சேவடி ஏத்துவாம் - செவ்விய திருவடிகளைத் துதிசெய்வாம்.

தேவி விளையாட்டுடையவள், பிரமன் முதலிய தேவர்கட்கெல்லாம் சுதந்தரமின்மையும் தனது சுதந்தரசத்தியால் குண்டலிசத்தியின் வழியாய்ப் பிராணனாய் நின்று அக்கரங்களைக்கொண்டு மூர்த்திகளைச்செலுத்துந் தன்மையுந்தோன்ற ஆவி நாயகன் என்றார்.

மா - தேவி. இரண்டும் வடசொல்லாதலால் வருமொழிமுதல் இயல்பாய நின்றது. ஆவிநாயகன் அங்கயற்கண்ணிமா தேவிநாயகன், ஒருபொருண்மேல்வந்த பலபெயர்கள். (௭)

## மீனாக்ஷியம்மை

வேறு.

பங்கயற்கணரியபரம்பரனுருவேதனக்குரியபடிவமாகி
யிங்கயற்கணகனுலகத்தெண்ணிறந்தசராசரங்களீன்றுந்தாழாக் [ட
கொங்கயற்கண்மலர்க்கூந்தற்குமரிபாண்டியன்மகள்போற்கோலங்கொண்
டங்கயற்கணம்மையிருபாதபபோதெப்போதுமகத்துள்வைப்பாம்.

(இ-ள்.) பங்கயற்கு அண் அரிய பரம்பரன் உருவே தனக்கு உரிய படிவம் ஆகி - பிரமனுக்கும் கிட்டுதற்கரிய சிவபிரானுடைய திருவுருவமே தனக்குரிய திருவுருவமாக, இங்கு அயற்கண் அகன் உலகத்து எண் இறந்த சராசரங்கள் ஈன்றும் தாழாக் கொங்கை அல்கண் மலர் கூந்தல் குமரி-இவ்வுலகத்தையும் அயலிடமாகிய இடம்பரந்த மற்ற விண்ணுலகங்களையும் அளவில்லாத ஆன்மகோடிகளையும் பெற்றருளியுஞ் சரியாத போதானந்தமாகிய தனங்களையும் அந்தகாரம்போன்ற மலரையணிந்த அளகத்தையுமுடைய கன்னியாய், பாண்டியன் மகள்போல கோலங்

கொண்ட அங்கயற்கண் அம்மை இருபாதம் போது எப்போதும் அகத்துள் வைப்பாம் - மலையத்துவசபாண்டியன் திருமகள்போலத் திருக்கோலங்கொண்டருளிய மீனாக்ஷியம்மையினது இரண்டு திருவடிகளாகிய தாமரைமலர்களை எக்காலத்தும் மனத்திற் கருதுவாம்.

பங்கயன் என்பதன் இறுதியில் தொக்கு நின்ற உம்மை - திருமால்மேனிற்றலால் இறந்தது தழீஇய எச்சம்.

மலையத்துவசபாண்டியன் வேள்வியில் மூன்றுவயதுபெண்ணாக வந்தருளினமையால் பாண்டியன்மகள்போற் கோலங்கொண்ட என்றார். பிரபஞ்சங் காரியப்படும்பொருட்டுப் பராசத்திவடிவாய் நிற்றலால் அப்பராசத்தியும் அவனது வடிவாமென்பார். பரம்பரனுருவே தனக்குரிய படிவமாகி எனவும், சிவன் திருவுள்ளத்துக்கேடாகப் பராசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி, திரோதானசத்திகளுமாய், அருவம் உருவம் அருவுருவமுமாய் நின்று, சேதனுசேதனங்களாயுள்ள பிரபஞ்சங்களையீன்றுந் தன்னியல்பு திரியாதிருந்தாளென்பார், உலகத்தெண்ணிறந்த சராசரங்களீன்றுந் தாழாககொங்கைக்குமரி எனவுங்கூறினார்.

தேவாரம். "ஒருடம்பினை யிருருவாகவே யுன்பொருட்டிற மீருருவாகவே" என்பதனாலும். சிவஞானசித்தியார். "சிவன்சத்திதன்னையீன்றுஞ் சத்திதான்சிவத்தையீன்றும், உலர்திருவரும்புணர்ந்திங் குலகுயிரெல்லாமீனறும, பவன்பிரமசாரியாகும் பான்மொழிகன்னியாகும்" என்பதனாலும. கல்லாடம். "அணடமீனறளித்தகன்னி" என்பதனாலுமறிக.

ஆகி செயவெனெச்சத்திரிபு - இசையெச்சமாய் நின்ற ஆய் என்னும் வினையெச்சங் கொண்ட வென்றும் பெயரெச்சததின் முடிவிலேகொணடது, கொங்கையென்பதன் ஐகாரவீறு எழுத்துப்போலியாயக் கொயகய் எனநின்றது. தொல்காப்பியம் மொழிமரபு. "அகரததிம்பர் யகரப்புள்ளியும்,ஐயெனெடுஞ்சினை மெய்பெறத்தோன்றும்." என்னுஞ் சூத்திரததுக்கு நச்சினார்க்கினியார் எழுதிய உரையால் உணர்க. அகம் என்னும் உள்ளிடப்பெயர் அங்கிருக்குமனத்தினமே னிற்றலால் இடவாகுபெயர் (௮)

## சபாபதி.

௯

உண்மையறிவானந்தவுருவாகியெவ்வுயிர்க்குமுயிராயநீரின்
றண்மையனல்வெம்மையெனத்தனையகலாதிருந்துசராசரங்களீன்ற
பெண்மையுருவாகியதன்னானந்தக்கொடிமகிழ்ச்சிபெருகயார்க்கு
மண்மையதாயம்பலத்துளாடியருள்பேரொளியையகத்துள்வைப்பாம்.

(இ-ள்.) உண்மை அறிவு ஆனந்தம் உருவாகி எவ்வுயிர்க்கும் உயிராய் - சத்துச் சித்து ஆனநதமே திருமேனியாகக்கொண்டு எல்லாவுயிர்களுக்கும் உயிராய் நின்று, நீரின் தண்மை அனல் வெம்மை என - நீரிற்குளிர்ச்சியும் நெருப்பில் உட்டிணமும் நீங்காதிருத்தல்போல, தன்னை அகலாதிருந்து சராசரங்கள் ஈன்ற பெண்மை உருவாகிய தன் ஆனந்தக் கொடி மகிழ்ச்சி பெருக - தன்னை நீங்காதிருந்து ஆன்மகோடிகளைப்பெற்றருளிய பெண்வடிவமாகிய தன் ஆனந்தக்கொடியென்னுஞ் சிவகாமசுந்தரியம்மைக்கு மகிழ்ச்சி யதிகரிக்க, யார்க்கும் அண்மையதாய் - யாவருக்குங்கிட்டுதற்கெளிதாகி, அம்பலத்துள் ஆடி அருள் பேர் ஒளியை அகத்துள் வைப்பாம் - பொன்னம்பலத்துள் நடனஞ்செய்தருளும் பெரிய ஒளிமயமாயுள்ள நடேசப்பெருமானை மனத்தில் சிந்திப்பாம்.

எவ்வுயிர்க்கும் உயிராய் என்றதனால் ஒருமல மிருமல மும்மலவாசிகளா யுள்ள ஆன்மாக்களுக்கும் என்பார், யார்க்கும் என்றார். அனாதி நித்த மலபந்த வான் மாக்களைப்போல ஆக்கக்கேடுகளின்றி நிலைபேறுடைய அனாதி சுத்தமுத்தத்தன்மை யனாய் நிற்றலின் உண்மை எனவும், ஆன்மாக்களிடத்தில் வியஞ்சகமாய நின்று உணர்த்துமாறுபோல தனக்கோர் வியஞ்சகம் வேண்டாது விளங்கியும் விளக்கஞ் செய்தும் இயற்கை யுணர்வினனாய நிற்றலின் அறிவெனவும், மலபோதத்தால் ஆன் மாக்கள் மலைவுறாச் சிற்றறிவால் அனுபவிக்குஞ் சிற்றின்பங்கள்போலாது அன் னோர்க்கு முத்தியினகண் பேரின்பமளிக்கும் வரம்பிலின்பமுடையனாய் நிற்றலின் ஆனந்தமெனவும், இவைகளே தனக்கோர திருவுருவமாக நிற்றலின் உருவாகி என வும், அசிகருவியாயுள்ள புத்தி ஆன்மாவையன்றி யறியாவாறுபோல அறியுஞ் சித் தாகிய ஆன்மாவு முதல்வன உளனீடாய் நின்றுணர்த்த உணர்வதன்றி யுணராமை யானும், இயக்க இயங்குவதன்றி இயக்காமையானும் எவ்வுயிர்க்கு முயிராய் என வும, தன்னையுந் தலைவனையுமறியாது பாசத்தில் தளைப்பட்டிருந்த அவதாரத்துக்காட் டிய கலாஞானகக்கருத்தறியாது அஞ்ஞானக்கூடக் கூட்டியமாயைத் தொடர்பால் சார்போதனென்னுந் தன்மைவாய்ந்து மேலுங்கீழுமாய் மருண்டு பவக்கடலிற் சுழ ன்று இளைக்கும ஆன்மாக்கள அவ்விளைப்பு நீங்கி முத்திக்கரையேற ஸ்ரீபஞ்சாக்கரத் திருநடனங்காட்டு மகிழவுகூடலில் ஆனந்தக்கொடி மகிழ்ச்சிபெருக எனவும், யாவருக்கும அளவைக்கெட்டாத் வொளிப்பிழம்பாய் நிற்றலின் பேரொளியெனவும், முத்திக்கரையேறுமபொருட்டு ஆடிய அந்நடனத்தால விளக்கியருளிய ஸ்ரீபஞ்சாக் கரங்களையும அவற்றினபொருளையு முறைப்படி சிந்திக்கவேண்டுதலின் அகத்துள் வைப்பாமெனவுங்கூறினார்.

உண்மைவிளக்கம். "பரையிடமாய்நின்றுமிகு பஞ்சாக்கரத்தால், வுரையுணர் வுக்கெட்டா வொருவன-வரைமகடான், காணுமபடியே கருணையுருக்கொண்டாடல், பேணுமவாக்குண்டோ பிறப்பு" என்றதனாலும்.

போற்றிப்பஃறொடை "பூமன்னுநான்முகத்தோன்புத்தேளிராங்கவர்கோன், மாமன்னுசோதி மணிமார்பன்-நாமன்னும், வேதமவேதாந்தம விளக்கஞ்செய்விந்து வுட, னாதாந்த நல்வேதம்-போதத்தா, லாமளவுந்தேட வளவிறந்தவப்பாலைச், சேமவொளியெவருந் தேறும்வகை-மாமணிசூழ, மன்றுணிறைந்து பிறவிவழக்க றுக்க, நின்றநிருத்த நிலைபோற்றி" என்றதனாலுமுணர்க.

ஆகி ஆப என வேறுபல வடுக்கிய வினையெச்சங்கள் பெருக வென்னும் வினையெச்சத்தின் முடிபாகிய ஆடி யென்னும எச்சத்தின் முதனிலையைத் தனித்த னிகொண்டன. (க)

## சோமசுந்தரக்கடவுள்.

வேறு

சடைமறைத்துக்கதிர்மருடந்தரித்துநறுங்கொன்றையந்தார்தணந்து வேப்பந், தொடைமுடித்துவிடநாகக்கலனகற்றிமாணிக்கச்சுடர்ப்பூணே ந்தி, விடைநிறுத்திக்கயலெடுத்துவழுதிமருமகனாகிமீனநோக்கின், மடவ ரலைமணந்துலகமுழுதாண்டசுந்தரனைவணக்கஞ்செய்வாம்.

(இ-ள்.) சடைமறைத்து கதிர்மருடந்தரித்து - சடாமுடியைமறைத்துப் பிர காசத்தையுடைய இரத்தினகிரீடத்தைத்தரித்து, நறுங்கொன்றையந்தார் தணந்து வேப்பம் தொடை முடித்து - அழகிய நறியமணத்தையுடைய கொன்றை மலர்மா

லையைக்களைந்து வேப்பமலர்மாலையைச்சூடி, விடம் நாகக் கலன் அகற்றி மாணிக்கம் சுடர்ப்பூண் ஏந்தி - விடத்தையுடைய சாப்பாபரணத்தைக்கழித்து ஒளியையுடைய இரத்தினாபரணங்களைப்பூண்டு, விடை நிறுத்திக் கயல் எடுத்து - இடபக்கொடியை ஏந்தாது மீனக்கொடியையேந்தி, மீனநோக்கின் மடவரலை மணந்து வழுதி மருமகனாகி உலக முழுதும் ஆண்ட சுந்தரனை வணக்கம் செய்வாம்-மீனாக்ஷியம்மையாகிய தடாதகைப்பிராட்டியாரைத் திருமணஞ்செய்து மலயத்துவசபாண்டியன் மருமகனாகி உலகமுழுமையும் மநுநூல்வழிநடத்திய சோமசுந்தரக்கடவுளைவணங்குவாம்.

தான்கொண்டருளும் அரசர் திருக்கோலத்துக்கேற்பக் களையவேண்டுவன வற்றைக்களைந்து கொள்ளவேண்டுவனவற்றைக் கொள்ளவேண்டுதலால், மறைத்து தரித்துத் தணந்து முடித்து அகற்றி ஏந்தி நிறுத்தி எடுத்தென ஒன்றற்கொன்று மறைவினை விதிவினையாகவும், தனக்கெனவோர் முறையிலனாயினும் அம்மையைத் திருமணமுடித்தற்கேற்ப வழுதிமருமகனாகி எனவும், வேதநெறியைத்தானே அக்கோலம் புனைந்து நடந்துகாட்டியும், செய்தும் செய்வித்தும், நிலைபெறச்செய்யானேல் ஒருவரும் அவ்வேதத்தின் பயனாயுள்ள அறத்தினியல்புணர்ந்து அப்புருடார்த்தத்தைப் பெறுதொழிவராதலின் ஆண்ட எனவுங்கூறினார்.

நடந்தும் செய்தும் என்பனவற்றைக் கல்லாடம் "மூலைமூன்றணைந்த சிலைநுதற்றிருவினை, யருமறைவிதிக்கத் திருமணம்புணர்ந்து, மதிக்குலம்வாய்த்த மன்னவனாகி, மேதினிபுரக்கும் விதியுடைநனாள்" என்பதனானுணர்க.

தரித்து முடிந்து ஏந்தி எடுத்து மணந்து ஆகி என வேறு பல வடுக்கிய வினையெச்சங்கள் தனித்தனி ஆண்டவென்னும் பெயரெச்சத்தின் முதனிலைகொண்டன. சடை மகுட முதலிய கருமப்பொருள்களை வினைமுதல்களாக வைத்துக் கூறினார். "செயப்படுபொருளைச் செய்ததுபோலத், தொழிற்படக்கிளத்தலும் வழக்கினுளுரித்தே" என்பதனால். இனைத்தென வறிபொருளில் வந்த முற்றும்மை தொகுத்தல்.

ஆசிரியவசனங் கூறவேண்டுதலின், கல்லாடம். "கடுக்கைமலர்மாற்றி வேப்பலர்சூடி, மைவாய்க்காப்புவிட் டணிப்பூணணிந்து, விரிசடைமறைத்து மணிமுடிகவித்து, விடைக்கொடிநிறுத்திக் கயற்கொடியெடுத்து, வழுதியாகி" என்றதன் பொருளுஞ் சொல்லும் இதனுள் அமைத்துக் கூறினார். (௧௦)

## தடாதகைப்பிராட்டியார்.

செழியர்பிரான்றிருமகளாய்க்கலைபயின்றுமுடிபுனைந்துசெங்கோலோச்சி, முழுதுலகுஞ்சயங்கொண்டுதிறைகொண்டுநந்திகணமுனைப்போர்சாய்த்துத், தொழுகணவற்கணிமணமாலிகைசூட்டித்தன்மகுடஞ்சூட்டிச் செல்வந், தழைவுறுதன்னரசளித்தபெண்ணரசியடிக்கமலந் தலைமேல் வைப்பாம்.

(இ-ள்.) செழியர்பிரான் திருமகளாய் கலைபயின்று முடிபுனைந்து செங்கோல் ஓச்சி உலகமுழுதும் சயங்கொண்டு திறைகொண்டு - பாண்டியர்குலத் தலைவனாகிய மலயத்துவசபாண்டியன் திருமகளாய்த் திருவவதாரஞ்செய்து வேதாகமமுதலிய கலைகளைக் கற்றுணர்ந்து மகுடஞ் சூட்டப் பெற்று மநுநூல்வழிச் செங்கோல் நடத்தி உலகமுழுமையுந் தன்னடிக்கீழ்ப்படுத்தி வேற்றரசரிறுக்குந் திறையைவாங்கி, நந்திகணம் முனைப்போர்சாய்த்து தொழுகணவற்கு அணிமணமாலிகை சூட்டி தன் மகுடம் சூட்டி செல்வம் தழைவுறு தன் அரசு அளித்த பெண்ணரசி அடிக்கமலம்

தலைமேல் வைப்பாம் - (திருக்கைலைக்குச் சென்று) போரில் எதிர்த்த நந்திகணங்களைப் புறங்கண்டு பிரமன்முதலியோர் வணங்கும் தன் கணவனாகிய சிவபெருமானுக்கு அழகிய மணமாலிகையைச் சூட்டித் தன் கிரீடத்தையுஞ் சூட்டிச் செல்வமிக்க தனது அரசியலையுங் கொடுத்தருளிய பெண்ணரசியாகிய தடாதகைப்பிராட்டியாருடைய திருவடித் தாமரைகளைத் தலையின்கண் முடிப்பாம் (வணங்குவாமென்றபடி)

எட்டுத்திக்குந் தன்வழிப்படுத்தினாள் என்பது தோன்றத் திறைகொண்டு சாய்த்தெனவும், சத்தி முன்னும் சிவம் பின்னுமாகத் தோன்றுமென்னு முறைப்படி அருள்வடிவாகிய சத்தி பாண்டியன் மகளாகத் தோன்றி அபிடேகம் பூண்ட அரசுரிமை முதலியவற்றைச் சிவம் வெளிப்படச் சத்தி சிவமாயிருந்த தன்மையும், தன்னுடைச் சங்கற்பத்தாலுண்டாகிய ஆக்கம் யாவும் சிவசங்கற்பமாதலினாய முடிபுமென்னும் இயல்புந் தோன்ற, நல் மகுடஞ்சூட்டிச் செல்வந் தழுவுறு தன்னரசளித்த பெண்ணரசி எனவுங் கூறினார்.

ஆய முதலிய வினைச்சொற்கள் ஒன்றனையொன்று கொண்டு அளித்த என்னும் பெயரெச்சத்தின் முடிவைப் பெற்றுக்கொண்டு, அது பெண்ணரசி என்னும் வினைமுதற்பொருளையுங்கொண்டு நிற்றலின் யாற்றுநீர்ப் பொருள்கோள். (கச)

## கான்மாறியாடினவர்.

பொருமாறி லிளைகடந்தோ ளொருமாறன் மனங்கிடந்த புழுக்கமாற
வருமாறிற் கண்ணருவி மாறாது களிப்படைய மண்ணுலகினூடு
உருமாறிப் பவக்கடல்வீழ்ந் தாசலைந்து தடுமாறி யுழலுமாக்கள்
கருமாறிக் கதியடையக் கான்மாறி நடிக்கவரைக் கருத்துள் வைப்பாம்.

(இ-ள்.) பொரும் ஆறு இல் இளைகடந்த தோள் ஒருமாறன் மனம் கிடந்த புழுக்கம் மாற - போர்செய்யுந் துறையில் இளைச்சியுற்ற பெரிய தோள்களையுடைய ஒப்பிலாத இராசசேகரபாண்டியனுடைய மனத்தின்கண் நிலைபெற்ற புழுக்கமாறுதற்காகவும், வரும் ஆறில் கண் அருவி மாறாது களிப்படைய - பெருக்கெடுக்கும் ஆற்றுவெள்ளம் போலக் கண்களினின்றும் ஆனந்தவெள்ளம் இடைவிடாமற் பெருக்கிக் களிப்படையாநிற்கவும், [illegible] விண்ணினும் மண்ணினும் உருமாறிப் பவக்கடல் வீழ்ந்து தடுமாறி உழலும் மாக்கள் கருமாறிக் கதியடைய - மேலுங் கீழுமாகப் போவதும் வருவதுமாகிய ஊசலைப்போலச் சொர்க்கமுதலிய பதங்களிற் செல்லுதலும் மீட்டு மண்ணுலகில் வருதலுமாகிய அச்சமாகிய பிறவிக்கடலில் வீழ்ந்து மனந்தடுமாறிச் சுழலுகின்ற மனிதர்கள் அப்பிறவிக்கடலினின்று நீங்கி மோக்ஷமாகிய கரையை அடையாநிற்கவும், கால் மாறி நடித்தவரைக் கருத்துள் வைப்பாம் - காலமாறியாடிய சோமசுந்தரக்கடவுளை இருதயத்தில் கருதுவாம்.

பரதநூற்றுறையிற் சென்ற பாண்டியன் கால் தளர்ந்து வேசறவு வருந்தி இவ்வாறே நமது பெருமான் எடுத்த திருவடியும் வேசறவு வருந்துமே என்று மாறாது மனம் புழுங்கினமையால், மனங்கிடந்த புழுக்கமாற எனவும், அப்பாண்டியன் வேண்டுகோளின்படி ஊன்றிய திருவடியை மேலெடுத்தருளினமையால் வருமாறிற் கண்ணருவி மாறாது களிப்படைய எனவும், ஆன்மாக்கள் இதாகிதங்களினால் ஆர்ச்சித்த கன்மங்களுக்கீடாய மேலுங் கீழுமாய இன்பதுன்பங்களை நுகர்ந்து திரிதலால் பவக்கடல்வீழ்ந்து தடுமாறி யுழலுமாக்கள் எனவும், அருளே பெத்தக காலத்துத் திரோதசத்தியாய் ஆன்மாக்களை மீட்கைக்கேதுவாங் காரியந்தோன்ற விடயகோடிகளை ருசிப்பித்து ஊன்றி நிற்றலும், முத்திக்காலத்து அங்ஙனம் ருசிப

பித்து நின்ற திரோதசத்தி அருள் வடிவாய் முதகரந்தப் பாதமலர்க்கீழ் வைக்குங் காரணந்தோன்றத் தூக்கி நிற்றலும் உடைமையால் அக்குறிப்புத் தோன்றக் கான் மாறி நடித்தவ னெனவுங் கூறினார்.

தேவாரம். "உறுகயிறூசல்போல வொன்றுவிட்டொன்றுபற்றி, வருகயிறூ சல்போல வந்துவந்துலவுநெஞ்சம்." என்பதனாலும்.

உண்மைவிளக்கம். "ஊன்றுமலர்ப்பதத்தே யுற்றதிரோதமுத்தி, நான்றம லர்ப்பதத்தேநாடு" என்பதனாலுமறிக.

உயிரின் றொழில் கண்ணின்மே லேற்றிக் களிப்படைய எனக் காரணத்தின் றொழிலை காரியத்தின்மேலேற்றிக் கூறினார். உருமாறி – உயர்திணையோடு சார்ந்த அஃறிணை உயர்திணை முடிபேற்றது. பவக்கடல் என்றமையால் கதியைக் கரை யென்றும். (கஉ)

## தக்ஷிணாமூர்த்தி.

கல்லாலின்புடையமர்ந்துநான்மறையாறங்கமுதற்கற்றகேள்வி
வல்லார்களுலவருக்கும்வாக்கிறந்தபூரணமாயமறைக்கப்பாலா
யெல்லாமாயல்லதுமாயிருந்ததனையிருந்தபடியிருந்துகாட்டிச [ம்.
சொல்லாமற்சொன்னவனைநினையாமனினைந்துபவத்தொடக்கைவெல்வா

(இ-ள்.) கல்லாலின் புடை அமர்ந்து – கல்லாலவிருட்சத்தின் கீழ் எழுந்த ருளி, நான்மறை ஆறங்கமுதல் கற்றகேள்வி வல்லார்கள் நால்வருக்கும்–நான்குவே தங்களும் ஆறங்கங்களுமுதலாக எல்லாக் கலைகளையுங் கற்றுணர்ந்த நூற்கேள்வியில் வல்லவர்களாகிய சனகர், சனந்தரர், சனாதரர், சனற்குமாரர், என்னும் நான்குமுனி வர்களுக்கும், வாக்கு இறந்த பூரணமாய மறைக்கு அப்பாலாய எல்லாமாய அல்ல துமாய இருந்ததனை – வாக்குக்கெட்டாத பரிபூரணமாய் வேதங்களுக்கு அப்புறந்த தாய் எல்லாப் பொருளுமாய அப்பொருள் தானல்லாததுமாய இருந்த வுண்மைப் பொருளை, இருந்தபடி இருந்து காட்டி சொல்லாமல் சொன்னவனை நினையாமல் நினைந்து பவத் தொடக்கை வெல்வாம் – அது அசைவற இருந்தவண்ணம் தானும் அசைவறவிருந்து சின்முத்திரையாற்காட்டி வாக்கால் சொல்லாமல் குறிப்பாற்சொ ல்லிய தக்ஷிணாமூர்த்தியைத் தற்போதவழியிற் சிந்தியாமல் திருவருள்வழி நின்று சிந்தித்துச் சனனபந்தத்தை வெல்லுவாம்.

பாசஞானங்களில் வல்லவராய் அநாதிமுத்தனைப்போல முத்தத்தன்மைவாய் ந்த யாமும் பிரமமாவே மென்னு மவாசனைபற்றி நிகழும் பசுஞானத்தை அவாய் நிற்றலின் கற்ற கேள்விவல்லார்க ளால்வருக்கும் எனவும், வைகரியாதி நால்வித வாக்கின் பகுதியவாகிய வேதமுதல் நாதமீறானவைகளுக்கு அதீதமாய்ச் சுட்டுணர் வுக்கெட்டாது யாங்கணும் பிரிவின்றிச் சமவேதமாய் நிறைந்து நிற்றலின் வாக்கிற ந்த பூரணமாய் எனவும், அங்ஙனம் வாக்கிறந்த பூரணமாய் விளங்கும் பதிப்பொ ருளை ஏனைய ஞானங்களினாலல்லாமல் பதிஞானத்தால் ஆகமத்தைக்கொண்டறிய வேண்டியிருத்தலின மறைக்கப்பாலாய் எனவும், உடலும் உயிரும் போலவும் பாலும் நீரும்போலவும் பரிதியு மதியும்போலவும் உலகத்தோடு வேற்றுமையின்றிக் கலப்பினால் ஒன்றாய் நிற்றலின் எல்லாமாய் எனவும், உயிரும் பாலும் பரிதியும் ஒன் றாகாத பொருட்டன்மையால் வேறாய் நிற்றலின் அல்லவுமாய் எனவும், குணமுங் குணியும்போல் உடனாய்நிற்குஞ் சயஞ் சித்தா யிருத்தலின் இருந்ததனை எனவும், சுட்டிறந்தறியும் அவரறிவின்கண் நீங்காது நிலைபெற்றுச் சோதிக்குட் சோதியாய்

விளங்கிநிற்றலின் இருந்தபடி எனவும், அரசன் மந்திரி முதலானவர்கட்குக் காரியப்பாட்டைக் கைச்செயலாற் காட்டியுணர்த்துமாறுபோலத் தானும் அசைவற விருந்து ஆகமத்துணிபா முப்பொருட்செயதியைச் சின்முத்திரையாற் காட்டியுணர்த்தினமையின் இருந்துகாட்டி எனவும், நூன்முகத்தானன்றித் தானருளாலுணர்த்தினமையின் சொல்லாமற் சொன்னவரை எனவும், அப்பெற்றித்தாகிய உபதேசப்பொருள் ஒற்றுமைப்பட்டு நின்றுணராதுணரும் அநுபவஞானமாத்திரைக்கே விளங்கிக் கோசரிப்பதன்மையின் நினையாமனினைந்து எனவுங் கூறினார்.

வேதமுதல் நாதமீறனவற்றைப் பாசஞானமென்றதும் நான்பிரமமென்றதைப் பசுஞானமென்றதும் பதிஞானம் இத்தன்மையதென்பதும்.

சிவஞானசித்தியார் "வேதசாத்திரமிருதிபுராணகலைஞானம் விரும்பசபை வைகரியாதித்திறங்கண்மேலா, நாதமுடிவானவெலாம்பாசஞான நணுகியான்மாவினைமீழ்நாடலாலே, சாதகனாஞன்பிரமமென்னுஞானங் கருதுபசுஞானம்" என்பதனாலும், "பரஞானத்தாற்பரனைத்தரிசிந்தார் பரமேபார்த்திருப்பர்" என்பதனாலும் எல்லாமா யல்லதுமா யென்றதை - தேவாரம் "பற்றுமாகிவானுளோர்க்குப்பல் கதிரோன்மதிபா, ரெற்றுநீர்தீக்காலுமேலை விண்ணியமானனொடு, மற்றுமாதோரபல்லுயிராய் மாலயனுமறைகள், முற்றுமாகிவேறுமானான் மேயதுமுதுகுன்றே" என்பதனாலும், துணமுங் குணியும்போல் உடனாய நிற்குஞ் சிதென்றது - திருவாசகம். "அதுபழச்சுவையெனவமுதெனவறிதற் கரிதெனவெளிதெனவமரருமறியா, ரிதுவவன்றிருவுரு" என்பதனாலும், திருக்களிற்றுப்படியார். "உடலுயிருக்குமுருவுடைமையென்றும், கடலுயிருக்கின்றுளகாண்" என்பதனாலும், சுட்டிறந்தறியும் அவரறிவினகண் விளங்கிநிற்குமென்றது, ஷெ "அனறிவருமைமபுலனு நீயுமசையாதே, நின்றபடியேநிற்க முன்னிற்குஞ்-சென்று, கருதுவதன்முன்னங் கருத்தழியப் பாயும், ஒருமகடனகேளவனுனக்கு" என்பதனாலும், அசைவறவிருந்து சின்முத்திரையாற் காட்டியதென்றது, தாயுமானசுவாமிபாடல. "கல்லாலினீழற்கணிலொரு நாலவர்க்குங் கடவுணியுணர்த்துவதுங் கைக்காட்டென்றால், சொல்லாலேசொலப்படுமோ" என்பதனாலும், நூன்முகத்தானன்றி அருளாலுணர்த்தினு ரென்றது - வினாவெண்பா. "அருளாலுணர்வாரக்கல்லாதசெம்மைப்-பொருளாகி" என்பதனாலும், ஒற்றுமைப்பட்டு நின்றுணரும் அனுபவஞானமாத்திரைக்கே கோசரிக்குமென்றது. திருக்களிற்றுப்படியார் - "உள்ளமுதலனைத்துமொன்றவுருக்கவரின், உள்ளமுருக்கவந்துன்னுடனும" என்பதனாலுமுணர்க.

முதல் எனதும் பண்படியாகவந்த வினைப்பகுதி வினையெச்சப் பொருளில் வந்ததா லீறுதிரிந்தது. (கஅ)

## சித்திவிநாயகர்.

உள்ளமெனுங்கூடத்தி லூக்கமெனுந்தறிநிறுவியுறுதியாகத்
தள்ளரியவன்பெனுந்தொடர்பூட்டியிடைப்படுத்தித்தறுகட்பாசக்
கள்ளவினைப்பசுபோதக்கவளமிடக்களித்துண்டுகருணையென்னும்
வெள்ளமதம்பொழிசித்திவேழத்தைநினைந்துவருவினைகடீர்ப்பாம்.

(இ-ள்.) உள்ளம் என்னும் கூடத்தில் ஊக்கம் என்னும் தறி நிறுவி தள்அரிய அன்பு என்னும் தொடர் உறுதியாகப்பூட்டி இடைப்படுத்தி - எமது மனமென்னுங் கூடத்தில் மனவுறுதி யென்னுங் கட்டுத்தறியைநாட்டி ஒழித்தற்கரிய அன்பென்னுஞ் சங்கிலி நிலைபெற அத்தறியினிடத்துப்பூட்டி அதனிடத்து அகப்படுத்தி, தறுகண் பாசம் கள்ளவினை பசுபோதம் கவளம் இட களித்து உண்டு (உண்மையை மறைத்தலில்) அஞ்சுதலில்லாத ஆணவமலத்தோடொன்றுகிய வஞ்ச வினைகளையு

டைய சிவபோதமாகிய கவளங்களை அருந்த அவற்றைக் களிகூர்ந்தருந்தி, கருணை என்னும் வெள்ளமதம்பொழி சித்திவேழத்தை நினைந்து வருவினைகள் தீர்ப்பாம் - கிருபையென்னும் மதவெள்ளத்தைப் பொழிகின்ற யானையாகிய சித்திவிநாயகக் கடவுளைச் சிந்தித்து வரும் வினைகளை யொழிப்பாம்.

ஆன்மாவினது இருதிறமும் அறிவுள ஒருப்படுதற்குரிய ... வழி நிக ழும் அறிவே மனமாய் நிற்றலால், உள்ளமெனுங்கூடத்தில் எனவும், அவ்வறிவாகிய மனத்தால் சாதனத்தாற் சாதிக்கப்பெறுவே மென்றெழுந்த வெழுச்சியே ஊக்கமா தலால் ஊக்கமெனுந்தறிநிறுவி எனவும், பசுபுண்ணியத்தால் சுவர்க்காதியிற் சென் றோனை அவ்வொழியில் கீழ்ச்செலுத்துந் தான யாகாதிகளில் வைத்த அன்புபோல வன்றி மேன்மேன் முறுகி வளர்வனவாய சரியை கிரியா யோகங்களில் வைத்த அன் பென்னுஞ் சங்கிலியை அம்மனவெழுச்சி தளராமைப் பொருட்டு அதனகட்பூட்ட வேண்டுதலால், உறுதியாகத்தளரிய அன்பெனனுநதொடர்பூட்டி எனவும், அவ்வன் பின்முதிர்ச்சியிற் றலைவன் றலைப்படுவனாதலால் இடைப்படுத்தி எனவும், கல்லெறிந்த வழிநீங்கி, அது விடுமவழிப் பரக்கும் நீர்ப்பாசிபோல ஆன்மா அரனதிருவடியை யுற் றவழி நீங்கினவாகிய மலமாயாகன்மங்கள் ஒரோவழி வாசனா பலத்தால அஞ்சாது மீளவரின் ஆன்மபோத நிகழுமாதலின் அதனை உபாய நிட்டைகளால் அவ்வாதனை யைத் திருவருளில ஒடுக்கவேண்டுதலால தறுகட்பாசக களாவினைப பசுபோதக் கவளமிட எனவும், அந்நிலைக்கண பசுகரணங்கெட்டுச் சிவகரணமாயினவனா மானோ மென்னும் பெருமிதமகிழ்ச்சியும இறந்து நின்றிட இவனானேயாய் நிறகக கூட்டி மகிழ்ந்து நுகருதலால் களித்துண்டு எனவும், அங்ஙனம ஆயவழிச் சுவானுபூதிகமா கிய தனது ஆனந்தப் பெருக்காங் கிருபாவெள்ளத்தைப பொழிதலால கருணையெ ன்னும வெள்ளமதம் பொழிசித்தி வேழம எனவுங் கூறினர்.

பசுபுணணியத்தில நிகழும் அனபு கீழ்ச்செலுததுமெனறதும், சிவபுண்ணி யத்தில் நிகழும் அன்பு மேனமேன் முறுகிவளருமெனறதும்.

சிவஞானசித்தியார். "தானமியாகந் தீர்த்தமாசசிரமந் தவங்கள்சாந்திவிர தங் கன்மயோகங்கள சரிததோ, ரீனமிலாச ... வர்க்கம பெறறிமைப்பளவின்மீள்வ ரீசனியோகக்கிரியா சரியையினின்முயனறோர், ஈனமிலாமுத்திபதமபெறறு" என் பதனாலும், அனபிற்றலைபபடுவனெனறது. திருவாசகம் "பத்திவலையிற படுவோன் காண்க" எனபதனாலும், ஆனமா அரனதிருவடியையுறறவழி மலமாயாகனமங்கள் நீங்குமென்றதும, ஒரோவழிவாசனாபலததான் வருமென்றதும, அதனை உபாயநிட் டைகளால் நீககலாமென்றதும், சிவஞானசித்தியார். "பாசிபடுகுட்டததிற கல்லி னைவிட்டெறியப் படும்பொழுதுநீங்கியது விடுமபொழுதுபரக்கு, மாசுபடுமலமா யை யருங்கனமமனைத்து மரனடியையுணரும்போ தகலும்பின்னணையும், நேசமொ டிந்திருவடிக்கீழ் நீங்காதேதூங்கு நினைவுடையோ நினறிடுவர் நிலையிதுவேயாகும்" என்பதனாலும், இங்ஙன மானோமென்னும் பெருமிதமகிழச்சியும் இறந்துநின்றிட இவன்றானேயாய நிற்கக்கூட்டுமென்றது, திருக்களிற்றுப்படியார். "பற்றினுட்பற் றைத் துடைப்பதொருபற்றறிநது, பற்றிப்பரிந்திருந்து பார்க்கினற-பற்றதனைப், பற் றுவிடிலந்நிலையே தானேபரமாகு, மற்றமிகுசொன்னேனறி" எனபதனாலுமுணர்க.

இட என்னும் நிகழ்கால வினையெச்சம், உணடென்னும் பிறவினைமுதல் வினையெச்சத்தின் முதனிலைகொணடது. இடுதலும் உண்ணுதலும் முனபின் இன்றி ஒரேகாலத்து நிகழ்தலால் நிகழ்காலமென்றது.

பலபொருள்களும் தம்முள் இயைபுடையன வாகவைத்து உருவகஞ்செய்த மையால் இயைபுருவகவணி. (கக)

## சுப்பிரமணியர்.

கறங்குதிரைக்கருங்கடலுங்காரவுணப்பெருங்கடலுங்கலங்கக்கார்வந்
துறங்குசிகைப்பொருப்புஞ்சூருரப்பொருப்பும்பிளப்பமறையுணர்ந்தோ
மறங்குலவுமகத்தழலுமவுணமடவார்வயிற்றினழலுமூள [ராற்று
மறங்குலவுவேலெடுத்தகுமரவேள்சேவடிகள்வணக்கஞ்செய்வாம்.

(இ-ள்.) கறங்கு திரை கரும் கடலும் கார் அவுணப் பெரும் கடலும் கலங்க-ஒலிக்கின்ற அலைகளையுடைய கரியகடலுங் கரிய நிறத்தையுடைய அசுரராகிய பெரியகடலுங் கலங்காநிற்கவும், கார்வந்து உறங்கு சிகைப்பொருப்பும் சூர் உரப் பொருப்பும் பிளப்ப - மேகம்வந்து துயிலுஞ் சிகரத்தையுடைய கிரவுஞ்சமலையுஞ் சூரனுடைய மார்பமாகிய மலையும் பிளவுபடாநிற்கவும், மறை உணர்ந்தோர் ஆற்றும் அறக்குலவு மகத்தழலும் அவுண மடவார் வயிற்றின் அழலும் மூள - வேதங்களையுணர்ந்த வந்தணர்செய்யுந் தருமவடிவாகிய யாகாக்கினியும் அசுரமகளிருடைய வயிற்றில் நடுக்கமாகிய தீயுங் கொழுந்துவிட்டெரியாநிற்கவும், மறம் குலவு வேல் எடுத்த குமரவேள் சேவடிகள் வணக்கம் செய்வாம்-கொலைத்தொழில்விளங்கும் வேலைத் திருக்கரத்தில் எடுத்தருளிய முருகக்கடவுளுடைய செவந்ததிருவடிகளை வணங்குவாம்.

அளத்தற்கரியகடலும் மலையும் நெருப்பும் தத்தமக்குரிய நெகிழ்ச்சிமுதலிய குணங்கள்தோன்ற, கலங்கப பிளப்ப மூள எனவும், வேல் சத்திவடிவாதலால் கடற்சார்பு மலையுந் தான் தோன்றுதற்குரிய விடங்களென வொற்றுமைநோக்கிக் கண்ணோடாது நிலைகலங்கவும் பிளவுபடவுஞ்செய்தமையால், மறங்குலவுவேல் எனவுங் கூறினார்.

ஓர்நெய்தனிலத்தலைவன் தவப்பயனால் அவள்திருமகளாய்க் கடற்சார்பில் அவதரித்தருளினமை இப்புராணத்தில் பின்னர்க்காண்க.

கலங்க பிளப்ப மூள வென்னுங் காரியப்பொருளில்வந்த வினையெச்சங்கள் எடுத்தவென்னும் பெயரெச்சத்தின் முதனிலையோடு தனித்தனிமுடிந்தன. அவுணப் பெருங்கடல் அவுணமடவார் குமரவேள் என்பன உயர்திணையில்வந்ததால் நிலைமொழி யீறுகெட்டுநின்றன. (கரு)

## நாமகள்.

பழுதகன்றநால்வகைச்சொன்மலரெடுத்துப்பத்திபடப்பரப்பித்திக்கு
முழுதகன்றுமணந்துசுவையொழுகியணிபெறமுக்கண்மூர்த்திதாளிற்
றொழுதகன்றவன்பெனுநார்தொடுத்தலங்கல்சூட்டவரிசுரும்புந்தேனுங்
கொழுதகன்றவெண்டோட்டுமுண்டகத்தாளடிமுடிமேற்கொண்டுவாழ்வாம்.

(இ-ள்) பழுது அகன்ற நால்வகைச்சொல் மலர் எடுத்து பத்திபடப் பரப்பி-குற்றத்தினின்று நீங்கிய பெயர் வினை யிடை யுரியென்னும நால்வகைச்சொற்களாகிய நால்வகை மலர்களையும் எடுத்துப் பத்தியுண்டாகப்பரப்பி, திக்குமுழுதும் அகன்று மணந்து சுவை ஒழுகி அணிபெற அகன்ற அன்பென்னும் நார்தொடுத்த அலங்கல் - எட்டுத்திக்கிலுஞ்சென்று மணம்வீசி மதுரமொழுகி அலங்காரம்பெறப் பரந்த அன்பாகிய நாரால்தொடுத்தமைத்த மாலையை, முக்கண் மூர்த்தி தாளில் தொழுது சூட்ட - திரிநேத்திரங்களையுடைய சிவபெருமான் திருவடியில் வணங்கிச்

